# 91

## ‘மனம் வெளுக்க’

அதெல்லாம் ஒரு சின்ன விஷயத்தில்தான் ஆரம்பமாயிற்று. சின்ன விஷயம் என்றும் சொல்லிவிட முடியாது. அகிலாண்டம் ஐயர் அதைப் பெரிய விஷயமாகக் கருதிவிட்டதால்தான் அவ்வளவு பெரிய மனஸ்தாபம், அவருக்கும் அவர் மைத்துனர் ராஜாராமையருக்கும் இடையே ஏற்பட்டது.

பண விஷயந்தான்; அகிலாண்டமையர் நல்ல ஸ்திதியிலிருந்தபோது முதல் இரண்டு பெண்களுக்கும் வேண்டியமட்டும் செய்தவர்தாம் ஒரு காலத்தில். ஐயம்பேட்டையில் காவேரிப்பாசனம் கொண்ட முதல் தரமான நன்செய்கள்; ரொக்கம் வேறு கையில்; மனைவி பேரிலோ, அவரும் ராஜாராமையருமாகப் போட்டி போட்டுக்கொண்டு சுமத்திய நகைகள்; அக்கிரகாரத்தில் பெரிய வீடு; மாடு கன்று; தோட்டம் துரவு – ஒன்றும் குறைவில்லை.

இரண்டு பஞ்சாயத்துப் போர்டுத் தேர்தல்கள்; அவற்றின் விளைவாக நேர்ந்த இரண்டு கட்சி விவகாரங்கள்; இரண்டு வருஷம் சாவி; முன்றாம் பெண் கல்யாணம்; அவ்வளவுதான்–நிலங்களும் ரொக்கமும் இருந்த இடம் தெரியவில்லை; நகைகள் ஒவ்வொன்றாக எப்படியோ மறைந்தன. வீடு அடைமானத்தில் விழுந்தது. மொத்தத்தில் தஞ்சாவூர் ஜில்லா மிராசுதார்கள் எல்லாரையும் போல அகிலாண்டமையரும் மயிலைக் காளை வண்டியை விற்றுவிட்டுப் பஸ்ஸில் ஏறிக் கோர்ட்டுக்குப் போக ஆரம்பித்தார்.

அவசரச் செலவுக்காக மைத்துனரிடம் புரோநோட்டின்பேரில் இரண்டாயிரம் ரூபாய் கடன் வாங்கவேண்டிய அவசியமும் ஏற்பட்டு விட்டது. வாங்கினபொழுது ஆறு மாசங்களில் திருப்பிக் கொடுத்து விடுவதாகத் திட்டம் போட்டுத்தான் வாங்கினார். ஆனால் திட்டம் போட்டபடி எல்லாம் நடக்கிறதா? அதுவும் கடனைத் திருப்பிக் கொடுக்கிற விஷயத்தில்!

*1943*

குறுகிய காலத் தவணையை உத்தேசித்து ராஜாராமையர் புரோ நோட்டுக்கூட வேண்டியதில்லை என்றார். புரோநோட்டு எழுதிக் கொடுக்காமல் பணம் வாங்கிக்கொள்ள முடியாது என்று அகிலாண்ட மையர் பிடிவாதம் செய்தார்.

ஆறு மாசங்கள், ஆறு ஆறு மாசங்கள் ஆயின. பணம் புரளுவ தென்றால் சாதாரணமாக இருக்கிறதா? ராஜாராமையரும் இடையில் வாய்திறக்கவே இல்லை. சம்சாரியாகிய தம் தங்கை படும் பாட்டைக் கண்டு பணப்பேச்சை எடுக்கவே அவருக்கு நா எழவில்லை. மேலும் அவர் அதைத் தங்கை விஷயமாகவே உபயோகப்படுத்த எண்ணி யிருந்தார்.

ஆனால் அதற்கு ஓர் ஆதாரம் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது அவர் எண்ணம். நோட்டு காலாவதியாக இருந்த மூன்று நாட்களுக்கு முன் அவர் தங்கை புருஷனைத் தனியாக வெளியே அழைத்துக்கொண்டு போய் வெகு சாதுரியமாகப் பேச்சை ஆரம்பித்து, 'நோட்டில் பேருக்கு ஏதாவது வரவு வைத்தால்...' என்ற மாதிரிச் சூசனையாகத் தன் மனத்தில் சங்கடப்பட்டுக்கொண்டிருந்த விஷயத்தை ஒருவாறாக வெளியிட்டார்.

அந்த நிமிஷமே அகிலாண்டமையர் எப்படியோ மாறிவிட்டார். மரியாதையுள்ள மனுஷ்யனிடத்தில் நெருக்கடியில் வாங்கின பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியாமற்போன துக்கமும் வெட்கமும் உடனே கோபமாகத்தான் வெளிப்பட்டன.

'வரவு என்ன வைப்பது பிரமாதத்திற்கு? இன்னும் ஒரு வாரத்தில் எங்கேயாவது ஏற்பாடு செய்து கொடுத்துவிடுகிறேன்! அவ்வளவு தானே?'

'நான் இப்போது உங்களைப் பணம் ஒன்றும் கொடுக்கும் படியே சொல்லவில்லை, அத்திம்பேரே!–நீங்கள்–'

'விஷயத்தை விஸ்தாரப்படுத்துவானேன்? ஒரு வாரம்'.

வரவு வைக்க வேண்டுமென்று மைத்துனன் கேட்டது மிகவும் நியாயமானது என்று அவருக்குத் தெரியாமலில்லை. ஆனால் அவரிடம் அந்தச் சமயம் கையில் கொஞ்சங்கூடப் பணம் இல்லை. பணம் கொடுக்காமல் வெறும் வரவு வைப்பதில் அவருக்கு இஷ்டமில்லை. அதை எப்படி வெளியில் சொல்வது?

'நான்தானே புரோநோட்டே எழுதவேண்டுமென்று சொன்னேன்! நீ கூட வேண்டாமென்று தானே சொன்னாய்? வரவென்ன இதற்கு? ரொம்ப நாளாகிவிட்டது. கொஞ்சம் பொறுத்துக்கொள். உன் தங்கைக் கூடச் சொல்லிக் கொண்டே இருக்கிறாள்.'

'அதைப்பற்றி ஒன்றும் பாதகமே இல்லை. மெள்ளச் சௌகரியம் போலக் கொடுங்கள். ஒரு வரி எழுதிவிடலாமா அதில்? என்ன? எப்பொழுது ஒரு காகிதம் இருக்கிறதோ–'

தம் மைத்துனன் தம்மை நம்பவில்லை என்று தானே அகிலாண்ட மையருக்கு நியாயமாகத் தோன்றும்? அது தம் நிலைமையைச் சுட்டிக் காட்டுவதுபோல் இருந்தது. அவருக்குக் கோபமும் அவமானமும் தாங்கவில்லை. அதைக் கண்டு ராஜா ராமையர் தம் மனத்திலிருந்த மேல்யோசனையைச் சொன்னார்.

'இல்லாவிட்டால் ஒன்று செய்வோம். வெட்டியான் கட்டளை, வில்லங்கம் இல்லாமல்தானே இருக்கிறது? நோட்டுத் தொகைக்கு–வட்டியைப்பற்றி யோசிக்க வேண்டாம்–பந்தகம் ஒன்று எழுதிவிட்டால் என்ன?' என்றார் ராஜாராமையர்.

அதைக் கேட்டதும் அகிலாண்டமையருக்குக் கோபத்துடன் துக்கமும் சேர்ந்து கொண்டது. வில்லங்கமில்லாத ஒரே சொத்தின்மேல் தம் மைத்துனனே நோக்கம் வைத்துவிட்டான் என்று அவருக்கு வேதனை ஏற்பட்டது. ராஜாராமையர் எண்ணினது வேறு. அந்த 'வெட்டியான் கட்டளை' என்ற நிலத்தைத் தவிர மற்றச் சொத்தெல்லாம் – இருந்ததும் அடைமானமாகி வட்டி வேறு அசாத்தியமாக ஏறிக்கொண்டிருந்தது. வெட்டியான் கட்டளையைத் தான் பந்தகம் வாங்கிக் கொண்டு கடன்காரர்களிடம் சிக்காமல் செய்து தம் தங்கைக்கு மிச்சம் பிடித்துக் கொடுக்கலாம் என்பது அவர் உத்தேசம். மகா ரோஷக்காரரான அத்திம்பேருக்கும் ஒரு சௌகரியம். தாமும் ஒருவிதத்தில் உதவியதாக இருக்கும் என்று எண்ணினார். ஆனால் அதை அப்போது வெளியிட அவருக்குப் பயம்.

அகிலாண்டமையர் திகைத்துப்போய்ச் சற்று நேரம் ஒன்றும் பேச முடியாமல் மௌனமாக யோசனை செய்தார். மைத்துனனே தம் கைசளைத்த நிலையில் இப்படி வலைபோட்டுத் தம்மைச் சிக்கவைக்க முயலுவான் என்று அவர் எண்ணவே இல்லை. தங்கையாவது, தமையனாவது; புருஷனாவது! உலகத்தில் பணம் என்றால் – இந்தமாதிரி அவர் எண்ணங்கள் ஓடின.

'நான் எதற்காகச் சொல்லுகிறேன்–' என்று ராஜாராமையர் தம் அபிப்பிராயத்தை லேசாக வெளியிட முயன்றார்.

'நான் உனக்குப் பந்தகம் எழுதித் தரமாட்டேன்!' என்று அகிலாண்டமையர் திடீரென்று அநாவசியமான கோபத்துடன் சொன்னார்.

ராஜாராமையருக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர் அப்படி அடித்தாற் போலச் சொன்னது அவருக்குச் சுருக்சுருக்கென்று தைத்தது. தாம் தங்கைக்கும் அவள் குடும்பத்துக்கும் அவ்வளவு செய்து, அதற்குத் துரோகமாக ஏதாவது செய்ய முடியுமா என்று அத்திம்பேருக்கு ஏன் தெரியவில்லை என்று அவருக்கும் கொஞ்சம் கோபம் வந்தது.

'ஏதாவது ஒன்று செய்துதான் ஆக வேண்டும்!'

'ஒரு வாரத்தில் பணம் கொடுக்கிறேன் என்றேனே!'

'ஒரு வாரத்திலாவது, கொடுக்கவாவது, அதெல்லாம் எதற்காகச் சொல்லுகிறீர்கள்?' என்று ராஜாராமையர் தம்மையும் மறந்து கொட்டி விட்டார்.

அகிலாண்டமையருக்கு அதைக் கேட்டதும் முகம் சிவந்தது. உடல் துடிக்கலாயிற்று.

'முடியாது என்றுதான் வைத்துக்கொள்ளேன். நீ என்னை மிரட்டிப் பந்தகம் வாங்கப் பார்க்கிறாய்; முடியாது! உன்னால் ஆனதைப் பார்த்துக் கொள்!' என்று அவர் கண்தெரியாமல் பேச ஆரம்பித்தார்.

'என்ன சொன்னீர்கள்? என்னால் ஆனதைப் பார்த்துக் கொள்ளவா? சரி, பார்த்துக் கொள்கிறேன்!'

'சரி, போ! என் வீட்டில் காலெடுத்து வைக்காதே இனிமேல்!'

இதுவும் அநாவசியம். ஆனால் கோபத்திற்கு அவசியம் அநாவசியம் என்ற அறிவு இருக்கிறதா?

'உம் வீட்டில் என்ன இருக்கிறது, நான் காலெடுத்து வைக்க?'

ராஜாராமையர் அதற்குமேல், 'என்னடா அதிகமாகப் பேசுகிறாய்? என்றார்.

'என்ன அதிகம் வந்துவிட்டது? நானுந்தான் போகிறது, போகிறது என்று இருக்கிறேன். என் தங்கைக்குப் போட்ட நகை ஒன்றை நீங்கள் பாக்கி வைத்திருக்கிறீர்களா?'

இந்த மாதிரியானப் பேச்சு வளர்ந்ததால் இரண்டு வீடுகளுக்கும் போக்குவரத்தே நின்றது.

## 2

கல்யாணிதான் நடுவில் அகப்பட்டுக்கொண்டு திண்டாடினாள். இரண்டு பக்கங்களிலும் பேச முடியவில்லை அவளால். கணவன் படும் பாட்டை அவள் தினமும் கண்முன் பார்த்தாள். கடன் ஏறி விட்டது என்ற கவலை யாலும் வைராக்கியத்தாலும் ஒரேவேளைச் சாப்பாடுதான் சாப்பிடுவது என்று பிடிவாதமாக ஏற்பாடு செய்து கொண்டார். மனைவி எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. கூடவே கல்யாணியும் அந்தமாதிரிச் செய்தாள். ஆறு குழந்தைகள் பெற்று அரை உடம்பாகியிருந்தவள் கவலையாலும், துக்கத்தாலும், ஆகாரமின்மையாலும் இளைத்துப் போனாள். அதனால் அடிக்கடி நரம்புகள் இழுக்க ஆரம்பித்தன. ஊரார் பிசாசு என்றார்கள்.

கணவன் தன் தமையன் மேல் கொண்ட கோபத்தைப் பிசகு என்று அவளால் கருதமுடிய வில்லை. ஆனால் தமையனையும் தன் மனமாற அவளால் புறக்கணிக்க முடியவில்லை. 'அவன் ஏன் அந்தமாதிரி நடந்து

கொண்டான்? இரண்டாயிரம் ரூபாயா அவனுக்குத் திடீரென்று அவ்வளவு பெரியதாகப் போய்விட்டது? தன்னை மறந்துவிட்டானே? அன்போடும், அநுதாபத்தோடும் அதுவரையில் அவளுக்கு ஒரு மனக்குறையுமின்றி எல்லாம் செய்தானே! அவள்தான் காரணம்! அவள்தான் அவன் மனசை மாற்றியிருக்க வேண்டும்? இப்படித் திடீரென்று அவள் கோபம், மனஸ்தாபம் எல்லாம் தமையன் மனைவி பேரில் திரும்பிற்று. தமையனைத் திட்ட மனம் வராமல் தமையனின் பெண்சாதிமேல் பழி சுமத்தினாள்.

'என்பேரில் உயிராக இருந்த அண்ணாவை இப்படி மாற்றி விட்டளே, படுபாவி! என்னைத் தோளில் தூக்கி வளர்த்த வனாச்சே!' என்று பழைய நினைப்புகள் கொண்டு பரிதவித்தாள்.

பெண்களிடையேயும் கலகம் வலுத்தது. நீ, நான் என்றுகூடப் பேச்சு வளர்ந்தது. அதை மனைவி மூலம் கேட்டு ராஜாராமையர் கூடத் தங்கைமேல் கொஞ்சம் மனஸ்தாபம் கொண்டார். அதைக் கண்டதும் அவர் மனைவி அதுதான் சமயம் என்று உரம் ஏற்றலானாள் என்று சொல்லவேண்டுமா? மனசு கல்மஷமாகிவிட்டதால் எந்த வார்த்தைக்கும் புது அர்த்தம் தோன்றுவது சகஜந்தானே?'

கொஞ்சநாள் கணவனுக்குத் தெரியாமல் கல்யாணி தமையன் வீட்டிற்குப் போய்க்கொண்டிருந்தாள். அவர் மனைவியுடன் சண்டை ஏற்பட்டதும் அங்கே போவதை நிறுத்திவிட்டாள். அதைக் கண்டு ராஜாராமையர் வருத்தமும் கோபமும் கொண்டார்.

ராஜாராமையர் சொன்ன பேச்சுத் தவறவில்லை. உடனே கோர்டில் தாவாசெய்து வீட்டை ஏலத்திற்குக் கொண்டுவந்து, தாமே அதை எடுத்துவிட்டார். அவ்வளவு தூரம் போனவருக்கு ஸ்வாதீனம் செய்து கொள்ள மட்டும் மனம் இடங்கொடுக்க வில்லை.

ஊரில் ஏலத்துக்குத் தமுக்குப் போட்ட தினத்தன்று கல்யாணி யின் நரம்புகள் இழுத்துக் கொண்டதால் படுத்த படுக்கையானாள். அகிலாண்டமையர் அவமானம் தாங்காமல் வீட்டைவிட்டு வெளியே கிளம்பவேயில்லை. மனைவியின் வியாதிக்குத் தாமே காரணமென்று பச்சாத்தாபங் கொண்டு அவளுடைய படுக்கையண்டையே உட்கார்ந்து வேண்டியதைச் செய்தார்.

சில நாட்கள் குழந்தைகள் மூலமாக ராஜாராமையர் தங்கைக்குப் பழங்களும் மருந்துகளும் அனுப்பினார். அகிலாண்டமையர் ஒரு நாள் அடைந்த ஆத்திரத்தில் குழந்தைகளையும் அங்கே போகக் கூடாது என்று தடுத்துவிட்டார். அதைக் கண்டு ராஜாராமையருக்கு வெறுப்பு உண்டா யிற்று. 'எக்கேடாவது கெட்டுப்போகட்டும்; நன்றி கெட்ட நாய்கள்' என்று தமக்குள் சொல்லிக்கொண்டார்.

கல்யாணி மட்டும் அப்பொழுதும் அண்ணன் பாசம் விடாமல் தன்

உடல்நிலையைப்பற்றி வீடு கூட்டுகிறவளிடம் ரகசியமாகச் சொல்லி அனுப்பினாள். பதில் வரவில்லை. கல்யாணிக்கு நெஞ்சு உடைந்தது போல் ஆகிவிட்டது.

### 3

பலவீனத்தின் காரணமாகவும் வியாதியின் பயனாகவும் ஒரு நாள் கல்யாணிக்கு மூர்ச்சை போட்டு விட்டது. அவள் இறந்துவிட்டாள் என்று எண்ணி அகிலாண்டமையர் துக்கம் மேலிட்டு வாய்விட்டு, அழுதுவிட்டார். குழந்தைகளும் அலறினார்கள். ஊர் கூடிவிட்டது. ராஜாராமையருக்கு யாரோ தகவல் சொன்னார்கள்.

ராஜாராமையர் கேட்ட இடத்திலேயே உட்கார்ந்து போனார். ஆறுதல் சொல்லவந்த மனைவிமேல் சீறி விழுந்தார்.

'உன் பேச்சைக் கேட்டு என் கல்யாணியின் மனசை உடைத்து விட்டேனே! என்னால்தான் அவள் செத்தாள்!'

'நீங்கள் வீட்டை ஏலத்திற்குக் கொண்டுவந்த தினம் படுத்தவள்தான்!'

ராஜாராமையர் அதைக் கேட்டு அறியாத உண்மையை அறிந்தவர் போலத் திடுக்கிட்டார். உடனே எழுந்து தெருவழியாக ஓடித் தங்கை வீட்டிற்குள் நுழைந்து, சுற்றியிருந்த கூட்டத்தை விலக்கிக்கொண்டு தங்கை கிடந்த படுக்கையண்டை போனார்.

'கல்யாணி! அம்மா, கண்திறடி! நான் செய்தது முட்டாள்தனம்! கோபமா உனக்கு?' என்று ராஜாராமையர் அலறினார்.

'அடே, ரெண்டு பேருமாகச் சேர்ந்து அவளை' என்று அகிலாண்ட மையர் புலம்பினார்.

'இல்லை, கல்யாணி என்னைப் பார்க்காமல் சாகமாட்டாள். அவள் சாகவில்லை. டாக்டரை கூப்பிடவேண்டும்!' என்று சொல்லிக்கொண்டு ராஜாராமையர் லோகல் பண்டு ஆஸ்பத்திரி டாக்டருக்குச் சொல்லி அனுப்பினார். டாக்டர் வந்து நாடியைப் பரிசோதித்துவிட்டு உடல் நிலைமையையும் கவனித்து, 'என்ன ஸார், நீங்கள், எல்லாம் தெரிந்த வர்கள்; இப்படி அமர்க்களப்படுத்துகிறீர்களே இது ஹிஸ்டீரியா. பிராணபயம் இல்லை' என்று சொல்லிவிட்டு வெளியே போனார்.

மூர்ச்சை போட்டுக்கிடந்த தங்கை, கால்மாட்டில் தமையன், தலை மாட்டில் புருஷன், சுற்றிலும் குழந்தைகள்;–எல்லோரும் மௌனம்.

இரண்டு மணி நேரங்கழித்துக் கல்யாணி கண் திறந்து பார்த்தாள்.

'கல்யாணி'

'அண்ணா'

'கல்யாணி, தமையன் கையை எடுத்து மெதுவாகக் கணவன் கையில்

வைத்தாள்.

அதற்குமேல் ஒருவரும் பேசவில்லை.

தேய்த்த பாத்திரங்களில் கழுவுமுன் இருக்கும் அழுக்கு, தண்ணீர் பட்டதும் விலகுவதுபோல மூன்று உள்ளங்களிலும் இருந்த மாசு அப்பொழுது விலகிற்று.

'மனம் வெளுக்க வழியுண்டு'; மரணம் என்ற மகத்தான சொல் ஒன்று இருக்கிறது.

●